



உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

# சைவசாஸ்திர பரிபாலனம்


| | | |
|---|---|---|
| தொகுதி உ | விக்கிரம௵ மாசி௴<br>1941 பெப்பிரவரி | பகுதி ௬ |


பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

## பிக்ஷாடனர்

இரணியாக்கனுடைய புத்திரனாகிய அந்தகாசுரன் என்பவன் அரும்பயனீயுஞ் செங்கோலை விடுத்துப் பெரும் பயமீயும் கொடுங்கோல் செலுத்தி அரசாட்சி செய்து வருங் காலத்தில் பன்னிரண்டு வருஷம் மழைவளங் குன்றியது. தானந் தவமிரண்டுந் தங்காவாயின. உயிர்களை வதைக்கற்பாலதாய ஓர் பஞ்சம் உண்டாயிற்று.

நாடொறு நாடி முறைசெய்யா மன்னவ
னாடொறு நாடு கெடும். —திருக்குறள்

கோனிலை திரிந்திடிற் கோணிலை திரியும்
கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரு
மாரிவறங் கூரின் மன்னுயி ரில்லை
மன்னுயி ரெல்லா மண்ணாள் வேந்தன்
றன்னுயி ரென்னுந் தகுதியின் றாகும்.
—மணிமேகலை துயிலெழுப்பிய காதை.

எனக் கூறிய சான்றோர் வாக்கு உண்மையன்றோ.

வேதபண்டிதர்களும் சிவபக்தர்களுமாகிய தாருகாவனத்து முனிவர்களும் பசியினால் வருந்திக் கௌதமமுனிவரை அடைந்து, பிராணாதாரமாகிய ஆகாரம் வேண்டும் என்று அவரை யாசித்தார்கள். அம் முனிவர் அவர்கட்குக் குறைவில்லாத பூஜை செய்து, நாடோறும் சிறந்த உணவுகளை அளித்துவருவாராயினர். அவர்கள் விருந்தினராக ஆச்சிரமத்திலிருந்தார்கள். அவர்கள் அச்சம் யாதுமின்றி அவரது ஆச்சிரமத்தில் இருந்து பன்னிரு வருஷம் உண்டுவருவாராக, பஞ்சம் நீங்கிற்று. மழை பெய்து நாடு செழித்தமையால் அவர்கள் அவ் வாச்சிரமம் விடுத்துத் தம்முறைவிடம் போதற்கு முயன்று முனிவரிடம் வந்து அநுமதி கேட்டார்கள். கௌதமமுனிவர் பின்னும் சில காலம் தமது ஆச்சிரமத்திலிருந்து சுகமே உண்டு வாழுமாறு கூறி, அவர்களைப் போகாவண்ணம் தடுத்தார். அப்போது அம் முனிவர்கள் மாயாரூபமாகிய கரிய பசு ஒன்றை மந்திரத்தினால் ஆக்கி, கௌதமருடைய சமீபத்தில் நிற்குமாறு செய்ய அம் முனிவர் அப் பசுவைக் கோட்டத்திற் கொணர்ந்து கட்டித் தொட்ட மாத்திரத்தில் அது விழ்ந்திறந்தது. அவ்விஷயத்தை முனிவர் அறியாது கோஹத்தி நிகழ்ந்துபோயிற்றே என்று சோகித்தார். அம் முனிவர்கள் "துவிஜசிரேஷ்டரே! இது பசுக்கொலை; நுமது சரீரம் நீங்கும்வரையும் நுமது அன்னம் புசிக்கற்பாலதன்று; நாங்கள் இவ்விடம் விட்டுப் போகின்றோம்" என்று கூறித் தமது வனத்தை அடைந்தார்கள்.

கௌதமமுனிவர் ஞானக்கண்ணால் உற்றுணர்ந்து அவர்கள் செய்தது வஞ்சனையென்றறிந்து "இவர்கள் வேதவொழுக்கத்தினின்று நீங்கிப் பரமேசுரனிடத்தன்பின்றிக் கொடிய துன்பசாகரத்தில் விழ்ந்து அமிழ்ந்துவார்களாக" என்று சபித்தார்

எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லைச்
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

என உத்தரவேதங் கூறி யாங்கு உண்டநன்றி கொன்ற முனிவர்களெல்லாம் அஞ்ஞானிகளாய் வேதமோதன் முத

லிய நற்கிரியைகளை விடுத்து, துன்பக்கடலுள் அழுந்தி, மீமாஞ்சை மதமே மெய்யெனக் கொண்டு, சிவபெருமானிடத்தில் அன்பற்றவர்களாய், கரும மாத்திரமே முத்திதர வல்லதென்று அவரை மறந்து வேதகருமங்களை அநுட்டித்துத் தம் மனைவியருக்கும் இவ்வாறே போதித்துக் கற்புக் காக்கும்படி செய்து, தாம் சுதந்திரனெனத் துணிந்து ஒழுகுவாராயினர்.

திருக்கைலாசமலையில் உமாசமேதராய் வீற்றிருக்கும் சிவபெருமான் அதனை அறிந்து, அவர்களைச் சுத்தவைதிக சைவமார்க்கத்திலே நிறுத்தியருளுமாறு திருவுள்ளங் கொண்டு, இருடிகளை மயக்கும் பொருட்டு விட்டுணுவை நினைத்தருளினார். விட்டுணு வந்து வணங்கி நிற்ப, தாம் திவ்விய சிங்காசனத்தினின்றெழுந்து அவருடன் திருக் கைலாசமலையை நீங்கி, "விட்டுணுவே! நீ முன்னொருகாலத்தில் கொண்ட மோகினி வடிவங்கொள்ளுதி" என்றார். விட்டுணு ஓர் அழகிய பெண்வடிவங்கொண்டு பாங்காராக வந்தார். அப்பொழுது சிவபெருமான் தாமும் அளவற்ற அழகுபொருந்திய ஓர் ஆணுருவை எடுத்துச் சென்றார். மோகினி வடிவுற்ற விட்டுணு சிவபெருமானுடைய திருமேனியின் அழகு முழுவதையும் கண்களாற் பருகி ஆசை மிகப் பெற்று, அதனை அப் பெருமானுடைய திருவருளால் ஒருவாறு சகித்து, அவருக்குப் பக்கத்திலே வந்தார்.

சிவபெருமான் ஒரு திகம்பர பிக்ஷாடன வடிவங் கொண்டு, அம் மோகினியோடு தாருகாவனத்திற் போய், "நீ நம்மை எண்ணாது வாழும் இம் முனிவர்கள் குழுமியிருக்கும் இடங்களிற் சென்று மோகத்தை உண்டுபண்ணி இவர்களுக்கு அதிமோகத்தைச் செய்து, விரதங்களைக் கெடுத்து நம்பாங்கர் வருதி" என்று ஆஞ்ஞாபித்துச் சென்றார்.

மோகினி, முனிவர் சபையை யடைந்து, தமது அழகிய ரூபத்தைக் காட்ட, கண்ட முனிவர்கள் மனக்கருத்து உடைந்து, கருமாநுட்டானத்தையும் விடுத்து, அதிகாமிகளாய் மோகினியைப் பின்றொடர்ந்தார்கள். பிக்ஷாடன

மூர்த்தியானவர் பிக்ஷை யேற்பார் போன்று முனிவர்களது வீதியிலே சென்று, தமது திருரூபத்தைக் காட்டி, வேதங்களை வீணையோடு படுத்திப் பாடி வீதிகளில் உலாவினார். அப்போது இருடி பத்தினிமார்கள் அவருக்குப் பிச்சையிடுவான் வந்து, அவரது பேரழகைக் கண்டு காமவசத்தராகி, மன்முருகி, உரோமஞ்சிலிர்த்து, அவர் மேற் பெரும் பற்று வைத்து, இனிய வசனங்களைக் கூறி, ஆனந்தமேலிட்டுத் தரிசனமாத்திரத்தாற் கருப்பமாயினார்கள். புருடசம்யோகத்தாலன்றிச் சிவதரிசனமாத்திரத்தால் உண்டாகிய கருப்பத்திலே பிறத்தல்வேண்டுமென விரும்பி, சிவனை நோக்கித் தவஞ்செய்துகொண்டிருந்த நாற்பத்தெண்ணாயிரவரும் அக் கருப்பங்களிற் புகுந்து, வருத்தமின்றிப் பிறந்து சிவன் அனுமதிபெற்றுத் தவஞ் செய்யப் போயினர்.

அப்போது இருடிபத்தினிகளாற் சூழப்பட்டுச் சிவபிரான் வீதியைக் கடந்து செல்ல, முனிவராற் சூழப்பட்ட மோகினி சிவசந்நிதானத்தில் வந்தார். அம் முனிவர்கள் மிகத் தீவினையாளர் ஆகையால், சிவபெருமான் அவர்களுக்குத் தம்முருவை மறைத்து வேறோர் வடிவத்தோடு தோன்றி நின்றார். தமது மனைவியரது செய்கையைக் கண்ட முனிவர் காமமொடுங்க மானமேற்கொண்டு கோபமதிகரிக்க இது செய்தார் யார் என்று சிந்தித்துச் சிவனேவலால் வந்த விஷ்ணுவும் சிவனுமே இதைச் செய்தாரென்று துணிந்து, தம்மனைவியரை வீட்டுக்குப் போகும்படி வலிந்தனுப்பினர். அம்மகளிர்கள் சிவஞான சுத்தராகிச் சிவனருளோடு போயினர். விஷ்ணுவும் தன் வடிவங்கொண்டு வணங்கி நிற்ப, பிரமாதி தேவரும் அங்கே வந்து வணங்கி நின்றார்கள்.

அறியாமை மேற்கொண்ட தாருகாவனத்து முனிவர்கள் "பிறப்பிடும்பை சாக்காடொன் றில்லார்போலும்" என்று திராவிடவேதம் கூறியவாறு பிறப்பிறப்பாதிகளில்லாத சிவபெருமானைக் கொன்றுவிடல் வேண்டுமென்று நினைந்து அபிசார வேள்வியொன்று செய்தார்கள். ஓம

குண்டத்தினின்று புலி ஒன்று விரைந்தெழுந்தது. முனிவர்கள் அப்புலியை நோக்கிப் 'பரமசிவனைக் கொல்' என்று வணங்கி விடுத்தார்கள். அப்போது சிவபெருமான, தமது திருக்கரத்தினால் அதன் வாலைப் பிடித்து அடித்துக் கொன்று தோலை வஸ்திரமாக உடுத்துக்கொண்டார். அதன்பின் அவ் வோமகுண்டத்தில் ஒரு முத்தலைச் சூலம் தோன்றிற்று. அதனை முனிவர்கள் விடுப்பச் சிவபெருமானுடைய திருமுன் சென்றது. அவர் அதனைப் பற்றித் திருக்கரத்திலேந்தி 'நீ நம்முடைய படையாவாய்' என்று பணித்தார். பின்பு அக் குண்டத்தில் ஒரு மான்கன்று தோன்றியது. முனிவர்கள் அதனைப் பசுபதிமீது விடுப்ப, அது பெருஞ் சத்தத்தினால் சராசரங்களை அழித்துக் கொண்டு சென்றது. உயிர்கள் அதனால் அழியாதபடி திருவருளைக்கஞ் செய்து, 'நம்முடைய காதுக்கனித்தாய் நின்று கூவுதி' என்று அருள்செய்து இடத் திருக்கரத்திலேந்தி நின்றார். பின்னர் அளவிறந்த சர்ப்பங்கள் எழுந்து மகா பயங்கரத்தோடு சீறிக்கொண்டுவந்தன. அமலனார் அவைகளை ஆபரணமாகத் தரித்தருளினார். அதன்பின்பு பல பூதங்கள் தோன்றி முனிவருடைய கட்டளையினால் வந்தன. பரமேசுரன் அட்டகாசஞ் செய்துவந்த அவற்றைச் சைன்னியங்களாகக் கொண்டருளினார். அதன்பின் ஒரு வெண்டலை தோன்ற அதனையும் முனிவர்கள் விடுத்தார்கள். அதனுடைய சிரிப்பினால் உலகம் அழியாதபடி அருள் செய்து திருச்சடைமேற் றரித்தருளினார். இருடிகள் தங்கள் மந்திரங்களை ஒன்றாக ஏவினார்கள். அவைகள் உடுக்கு வடிவாகிச் சிவபெருமானை அணுகின. அவர் அதனை ஓர் திருக்கரத்திற் பற்றி ஏந்தியருளினார்.

(தொடரும்.)

---

## ஓர் விஞ்ஞாபனம்

அன்பர்களே!

தைமீ முதலாந்திகதி வெளியாகவேண்டிய நமது "சைவசாஸ்திரபரிபாலனம்" எமக்கு உடல்நலமில்லாதிருந்தமையாலும், வேறு சில விக்கினங்களாலும் மாசிமீ பத்திரிகையோடு சேர்த்து வெளியிட வேண்டிநேர்ந்தது. அதற்கு மற்றோர் காரணம், முதலாவது ஆண்டுச் சந்தாவை இன்னும் பலர் செலுத்தாதிருத்தலேயாம். இரண்டாவது வருடப்பணத்தைச் செலுத்திய பத்திரிகாபிமானிகள் இது விஷயமாகக் குறைகூறுவார்கள் என்று நம்புகிறேன். இன்னும் இவ்விதம் நடைபெறாதபடி முதலாண்டுப்பணத்தையாவது செலுத்தி யுபகரித்தல் அபிமானிகளது கடமையாகும்.

நன்கொடையளித்த உபகாரபுருஷர்கள்:—

| | | |
|---|---|---|
| ஸ்ரீமத் கு. செல்லத்துரை உபாத்தியாயர் இடைக்காடு | ரூபா | 15—00 |
| " சி. செல்லத்துரை ஓவசியர் ஆண்டியம்பலமா | " | 5—00 |
| " K. E. தம்பி பிறக்கிராசியார் | " | 7—00 |
| " சி. நாகையா இந்துக்கல்லூரி மானிப்பாய் | " | 5—00 |

[ப—ர்.]

---

# ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் குருபூசையும், பிரசங்கமும்

ஸ்ரீ கொங்குமண்டல ஆதிசைவப்பிராமண மகாசபையினர் அவிநாசியில் குருபூஜைவிழா நடத்தியபோது சிவஸ்ரீ காசிவாசி ஈசானசிவாசாரியார் அவர்கள் செய்த சொற்பொழிவு.

(தொகுத்தவர் M. R. நாகேசுரக்குருக்கள், மானேஜர் "சிவாகமவித்யா")

(முற்றொடர்.)

சூரியகிரணம் பட்ட மரம், செடி முதலியவைகள் நன்றாக உரமாக வளருவதும், சூரியகிரணம் படாதவை மழுங்கியிருத்தலும் காண்கிறோம்.

உணவுகளில் அப்ரேக், தங்கம், வெள்ளி, மின்சாரம் முதலிய சத்துக்கள் இருக்கின்றன. மின்சாரசக்தி எதிலிருந்து எடுக்கமுடியுமோ அதிலிருந்துமாத்திரம் எடுத்திருக்கிறார்கள். பசுமை வேண்டும் மரங்களை ஒழித்தால் தழைகள் இல்லாது போதலால் மழை குன்றும். மலையுள்ள பக்கங்களில் மரமும் தழைகளும் அதிகம் இருத்தலால் அங்கு மழை அதிகம் பெய்யும். பச்சை இலைகளுக்கு ஒளியை வாங்கும் சக்தி அதிகம் இருக்கின்றது. பூசையில் பத்திரபுஷ்பங்களைப் புஷ்பாஞ்சலி செய்வதால், பரமனருள் ஒளிபடுகிறது.

சிரசுக்குமேல் அஞ்சலிசெய்வதால் அங்கு அதிகமாக உள்ள ஒளியைக் கிரணித்து, நாம ஆவாஹிக்கும் பிமபத்தில் ஒளியை உண்டாக்கி, அதன்மூலம் நம்மைத் தூய்மைப்படுத்துகிறோம். நிச்சப்தமாய் பூசைசெய்தல் அவசியம். காரணம்: ஒலியை ஒலி தாக்கிச் சேதப்படா திருக்கவே. சிரசுக்குமேல் பன்னிரண்டங்குலம் உயர்த்திப் புஷ்பாஞ்சலி செய்து மெல்ல அலைக்காமல் இறக்கி, மனுஷிகளுக்கெட்டா இறைவனை ஆவாஹனம் செய்தல்வேண்டும். ஆகவே, இத்துணைச் சிறப்புக்கள் உள்ள நம் சமயம் சுவரஸ்தம்பம்போல் அசைக்க முடியாததாகும்.

உலகத்திலுள்ள பொருள்கள் எல்லாம் உஷ்ணமுடையன. உஷ்ணம் குறைந்தால் அழிந்துபடும். உலகமே உஷ்ணம், தட்பம் என்ற இருவகைப் பொருளில் ஒன்றியது.

| (சிவம்) | (சக்தி) |
|---|---|
| உஷ்ணம் | தட்பம் |
| செம்மை | தண்மை |
| செந்நிறம் | நீலநிறம் |
| பாயும் சக்தி | தாங்கும் சக்தி |

இந்தச் சக்திக்குக் கூர்மை என்று பெயர். "கூர்மையே குணயே" என்பதும் காண்க. கூர்மை இழுத்து வாங்கும் சக்தி. அது வசி என்று சொல்லப்படும். வசி வர்ண வியத்தியயத்தினாலே சிவ என்று வந்தது. ஹிம்சி சிம்ஹ என்பதுபோல் சிவம் கூர்மை. கூர்மை இழுத்து வாங்கும் சக்தி. அதுபற்றியே "உள்ளங்கவர் கள்வன்" (தஸ்கராணாம் பதயே நம:) என்று சொல்லப்பட்டன. சுவாதீனப்படுத்தும் பொருள் சிவம். செம்மைப்படுத்தும் பொருள் சிவம்.

"வெள்ளநீர்ச் சடையர் போலும் விரும்புவார்க் கெளியார் போலும்
உள்ளுளே யுருகி நின்றங் குகப்பவர்க் கன்பர் போலும்
கள்ளமே வினைக ளெல்லாம் கரிசறுத் திடுவர் போலும்
அள்ளலம் பழனை மேய ஆலங்காட் டடிக ளாரே."

ஆகவே, இழுப்பது சிவம்; தாங்குவது சக்தி.

இந்த இரண்டினாலும் உலகம் நடைபெறுகிறது. அதாவது, தாங்கும் சக்தி ஒன்று; இழுக்கும் சக்தி ஒன்று. இந்த இரண்டினாலும் (Positives & Negatives) உலகம் நடைபெறுகிறதென்று மேனாட்டார் கூறுகின்றனர்.

உபயோகமில்லாத கடவுள் என் கடவுள் என்று எந்த மதவாதியும் ஒப்பமாட்டான். பேராற்றல், பெருங்கருணை உடைய கடவுளே என் கடவுள் என்று சொல்லுவான். அந்தப் பொருள் முடிவில் சிவம்; அந்தச் சிவத்தைச் சார்ந்த சமயத்துக்கு நீற்றுச்சமயம் என்று பெயர். நெருப்பு சிவம். அதன்மேல் பூத்தது நீறு. ஆகவே, நீறுபூத்த சமயத்தை எந்தப் பொருளைக் கொண்டும் ஒன்றும் செய்ய முடியாது. ஞானசம்பந்தர் மதுரை சென்றபோது அங்கு தங்கியிருந்த திருமடத்தில் சமணர்கள் தீயிட்டார்கள். அதனால் ஒன்றும் செய்ய முடியாமையை

ஆதி மந்திர மஞ்செழுத் தோதுவார் நோக்கு
மாதி ரத்தினு மற்றைமந் திரவிதி வருமே
பூதி சாதனர் மடத்திற்றும் புனைந்தசா தனைகள்
சாதி யாவகை கண்டமண் குண்டர்க ளர்ந்தார்.

என்று சேக்கிழார் வாக்குச் செப்புகின்றது.

நெருப்பு எல்லாப் பொருளையும் அழிக்கும் ஆற்றலுடைத்து. எல்லாவற்றையும் அழித்து நீறாக்கித் தானும் நீறாய்விடும். நெருப்பைச் சார்ந்த சமயம் நீற்றுச்சமயம். இது இயற்கையாய் நம் சமயத்துக்கு அமைந்த அமைப்பு. பத்திரபுட்பங்களை அர்ச்சித்தலால் நம்மை ஒளியடையச் செய்விக்கின்றது. அப்படிப்பட்ட பத்திரபுஷ்பங்களைத் திருக்கைலையிலே சிவபெருமானுக்கு எடுத்துச் சாத்துதலாகிய திருத்தொண்டைக் கைக்கொண்டவர் நமது பரமாசாரியசுவாமிகள்.

நமது சுவாமிகள் சரிதம் திருக்கைலாயத்தில் தொடங்கிய சரித்திரமாகும். கைலையிலே தொடங்கி, இப் பூவுலகிலே கலந்து, பின் தோன்றியதிலே ஒடுங்குந் தன்மையைக் காட்டிக் கயிலைசென்றடங்கும். (பெரியபுராணம் இப் பெருஞ் சிறப்புடையது.)

என்ன நோக்கத்தோடு சிவபெருமான் இதைச் செய்வித்தார்? என்று பார்த்தால்,

"மாதவஞ் செய்த தென்றிசை வாழ்ந்திடத்
தீதி லாத்திருத் தொண்டத் தொகைதரப்
போது வாரவர் மேன்மனம் போக்கிடக்
காதன் மாதருங் காட்சியிற் கண்ணினார்.

என்பதனால் அறியலாகும்.

மாதவஞ்செய்த தென்திசை வாழ்ந்திட இருவர்க்கும் ஒரு குறிப்புத் தோன்றிய தன்மையாகப் பாடிய வாக்கு என்னே! திருக்கைலாயத்தில் காதல் கொண்டதாகக் கருதுவது தவறு. தென்திசை வாழ்ந்திட வந்த காதலேயன்றி ஆசார்யசுவாமிகள் (உடல் நன்மை கருதி) மகிழ்ந்திட வந்த சிறு காதலன்று.

திருக்கைலாயம் மற்றைக் காதல்களுக்கு இடந்தாதென்பதற்கு மன்மதன் எரிபட்டதே சான்று. நம் மணம் எல்லாம் மன்மதனிடையில் நிகழ்கின்ற (உடற்கட்டு) மணம். ஆசாரியசுவாமிகள் மணநோக்கு நிகழ்ந்த இடம் மன்மதன் எரிபட்டு (உயிர்களை உய்வித்து அருள்புரியும்) திருக்கைலாயம். நம்மணம் காமஉணர்ச்சி மணமாக மன்மதன் ஆளுகையில் நடக்கும் மணம். சுவாமிகள் மணம் காமஉணர்ச்சியில்லாத இடத்தில் தோன்றிய மணம். நாம் குறுகிய மனப்பான்மையோடு கூடிய வாழ்க்கை வாழ்கின்றோம்.

ஆசாரியமூர்த்திகள் மணம் உலகத்தை உய்விக்கவந்த மணம். வாழ்வில் பிறந்து, சீவித்தற்பொருட்டு அன்னமுண்ணுவது. அன்னம் உண்பதற்காகச் சீவிக்கிற வாழ்வு நம் வாழ்வாகக் கருதியுள்ளோம். இதுவே குறிக்கோளில்லாத வாழ்க்கையாகும். சுவாமிகள் உலகம் உய்ய இமைத்தார். இனி, உய்யவேண்டிய பொருள் ஒன்று பாக்கியில்லாமல் உய்யவே 18 ஆண்டுகள் வழிகாட்டி யாண்டார்.

பெண்ணின்றி வாழ்தலாற்றான் சிறப்பென்பதில்லை. பெண்ணினுடன் வாழ்தலால் பேரின்பத்துக்குக் கேடு யாதொன்றுமில்லை. ஆசாரியசுவாமிகள் வாழ்க்கையை நமக்குக் காட்டவே,

தென்னாவ லூர்மன்னன் தேவர்பிரான் திருவருளால்
மின்னாருங் கொடிமருங்கிற் பரவையெனு மெல்லியறன்
பொன்னாரு முலையோங்கற் புணர்குவடே சார்வாகப்
பன்னாளும் புயில்யோகம் பாம்பரையின் விரும்பினார்.

என்பதைத் தெய்வச் சேக்கிழார்பெருமான் விளக்கியருள்கின்றார். அன்றி, அவரும் நமக்கெல்லாம் வழிகோலவந்த வள்ளற்பரமாசாரியருமாவர். பெண்கள் வாழ்வும் நம்மோடொத்த வாழ்வேயாகும். ஆகவே, ஆசாரியமூர்த்திகள் வாழ்வும் பெண்மை கலந்த வாழ்வேயாகும். பெண்களுடன் வாழ்தல் ஆன்மலாபத்துக்கு இடையூறென்று கருதுவோர் இந்த ஆசாரியசுவாமிகள் சரித்திரத்தைத் தெரிந்து, பெண்களோடு வாழ்தல் தப்பு என்ற பயத்தை விட்டு ஒழிக்கவேண்டும்.

மனிதன் வாழும் வாழ்க்கையில் முடிவு கருதி வாழவேண்டும். அது குறிக்கோள் என்பது. அதைத் தெளிவாக அறிவிக்கவந்தது நமது ஆசாரியசுவாமிகள் சரிதம்.

நம் நாட்டில் ஏழைகளும் வறுமையும் மலிந்து, உணவு என்பது ஒன்று உண்டுபோலும்? என்று பார்ப்பதுபோல், படித்தவர்களும் அல்லாதவர்களும் சமயஞானம் என்பது ஒன்று உண்டுபோலும்? அது யாங்ஙனம்? என்னும் காலமாயிருக்கிறது.

இந்நாட்டில் ஏழ்மைக்கும் வறுமைக்கும் உரிய பொருள்கள் கிடையாது; அது நம் நாட்டில் அறிவு, ஆராய்ச்சி இன்மையால் வந்ததாகும். அது போன்று சமயஞான ஆராய்ச்சியையும் இனி மற்ற நாடுகளுக்கே விட்டுவிட்டு, வெறும் போசன ஆராய்ச்சியில் மூனைந்துநிற்பதாகிவிட்டது நம் நாடு. ஆசாரியசுவாமிகள் சரிதம், மற்றும் பல பெரியார் பிரசங்கங்கள் இவைகளில் சமயஞான ஆராய்ச்சி விரிவாகத் தெரியலாம்.

ஆண்டவன் அடியைப் பற்றுசக் கொண்டு வாழவேண்டுவது மனித வாழ்வு. அந்நிலைமையிலேயே "காதன் மாதருங் காட்சியிற் கண்ணினர்." உலகத்திலே பல காட்சிகள் உள. ஆசாரியசுவாமிகள் மனதைத் திருப்பி உள்ளவர் ஆண்டவன். பத்திரபுஷ்பத்தோடு சிவபெருமான் சந்நிதியை யடைந்தனர் சுவாமிகள்.

ஆதி மூர்த்தி யவன்றிற நோக்கியே
மாதர் மேன்மனம் வைத்தனை தென்புவி
மீது தோன்றியம் மெல்லிய லாருடன்
காத லின்பங் கலந்தணை வாயென,

ஆசாரியசுவாமிகள்,

கைக ளஞ்சலி கூப்பிக் கலங்கினன்
சைய சேவடி நீங்குஞ் சிறுமையேன்
மையன் மானுட மாய்மயக் கும்வழி
யைய னேதடுத் தாண்டருள் செய்யென,

வருந்த, எம்பிரான் "அரிவையர்க்கு அறிவை யீந்த சுந்தர! சொற்ற கேள், நீ அம்புவியிற் றோன்ற உன்னை ஏவுவது இதற்கே. நீ மயங்கா வண்ணம் புதுவாழ்வைக் காட்டுதும்" என்றருளிச்செய்தார். திருக்கைலாயத்திலே (நாயக நாயகி பாவனையில்) ஆலாஹாலவிஷத்தைக் கையிலெடுத்துப் பெருமானுக்கு இன்னடிசில் ஊட்டுவதுபோல் உண்பித்த பெருமை படைத்த சுவாமிகள் வடிவம், திருமுனைப்பாடிநாட்டிலே மாசில் அந்தணராகிய ஆதிசைவ வேதியர் குலத்திலே, சடையனார் இசைஞானியார்பால், தீதகன்றுலகமுய்யத் திருவவதாரம் செய்தார். சிவபெருமானுடைய திருவுள்ளம் மாதவம் செய்த தென்திசை வாழவும் தீது அகன்று உலகமுய்யவும் ஆதலால், சுவாமிகள் திருவவதாரத்தால் தென்திசை வாழ்ந்தது. செயலால் தீது அகன்றது. உலகம் உய்ந்தது.

(தொடரும்.)

---

# உ ண் மை

[சிவபுரம், சிவஸ்ரீ சுவாமிநாதசிவாசாரியர் அவர்கள் எழுதியது]

உலகத்திலே,

ஸதேவ ஸௌம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம்।

ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேய।

"சௌமிய! இரண்டாவதற்றதாய் ஏகமாகிய சத்தே முதலில் இருந்தது. அந்தச் சத்து அநேகமாவேனென நினைத்தது. என்ற சாந்தோக்கியம் உரைக்கும் சத்து சாங்கியர் கூறும் பிரதானமோ எனில் அன்று; அந்தச் சத்து அநேகமாய் ஆவேன் என்று நினைந்த நினைவு ஜடமாகிய பிரதானத்திற்கு இயலாது. அங்ஙனமாயின், அச் சாந்தோக்கியத்தில், அக்கினி நினைந்தது, அப்பு நினைந்தது எனக் கௌணமாய்ச் சடப்பொருள்களுக்கும் அந்த நினைவு கூடுமெனக் கேட்கப்படுதலின், பிரதானமும் நினைந்ததெனக் கௌணமாய்க் கேட்கலாமோ எனின்; அன்று. அந்தச் சாந்தோக்கியம் உபக்ரமத்தில் ஸதேவ ஸௌம்ய என்று கூறி, உபஸம்ஹாரத்தில் ஸ ஆத்மா தத்வமஸி அந்த ஆத்மா நீ ஆகிறாய் என்று கூறலால், அந்தச் சேதனமாகிய சத்து எனப் படும் ஆன்மா அந்தச் சடமாகிய அக்கினி அப்புக்களுள்ளே நின்று கொண்டது காரணமாக அவை அவ்வாறு நினைந்தன எனக் கூறப்படினும், அந்நினைவு சத்தாகிய ஆன்மாவுக் கன்றிச் சடமாகிய தேயு அப்புக்களுக்குக் கௌணமாயேனும் செல்லாததுபோல, சடமாகிய பிரதானத்திற்கும் அது செல்லா தாமாகலின், அந்தச் சத்து ஆன்மாவன்றிப் பிரதானம் அன்று.

ஆத்மைவேதமக்ர ஆஸீத்।

ஆத்மாவே முதலில் இருந்தது எனப் பிருகதாரணியமும்,

ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீத்।

ஸ ஈக்ஷத லோகாந்நு ஸ்ருஜா இதி।

ஆன்மாவே ஒருவனாய் முதலில் இருந்தது. நான் உலகங்களைச் சிருட்டிப்பேனென என ஐதரேயமும் அப்படி ஆத்மாவைச் சத்தின்பாற்படக் கூறியது.

சத்து பிரதானமாகாதொழியின் அதனை ஆன்மா எனச் சாந்தோக்கியமும் பிரகதாரண்யமும் ஐதரேயமும் கூறுதலால் அந்தச் சத்தைச் சீவாத்மா எனக்கொள்ளலாம் எனில்; அன்று

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑌾 𑌇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌦𑍇𑌕𑌮𑍇𑌵।

முதற்கண்ணே பிரமம் இதுவாயிருந்தது என்று பிருகதாரண்ணியம் கூறுதலால் அந்தச் சத்து சீவாத்மா அன்று; பிரமமேயாம்.

அன்னம் பிரமம், மனம் பிரமம், பிராணன் பிரமம், விக்ஞானம் பிரமம் என்று சுருதி கூறுதலால் அன்னம் மனம் பிராணன் விக்ஞானம் என்பவற்றுள் ஒன்றைக் கூறியதாமெனில் அன்று.

𑌸𑍇𑌯𑌂 𑌦𑍇𑌵𑌤𑍈𑌕𑍍𑌷𑌤।

அந்தச் சத்தாகிய தேவதை நினைத்தது எனச் சாந்தோக்கியம் கூறுதலால், அது அன்னம் முதலானவைகளிற் செல்லாது.

𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮।
𑌨𑌹𑌿 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌤𑍍𑌵𑌦𑍁𑌤𑍍𑌤𑌰𑌃।
𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑌃 𑌸𑌮𑌵𑌰𑍍𑌤𑌤𑌾𑌗𑍍𑌰𑍇।

ஆதித்தியன் பிரஹ்மம். இந்திரனே! உன்னில் உயர்ந்தோன் இல்லை. இரணியகருப்பன் முதலில் இருந்தான் என்றத் தொடக்கத்த சுருதிகள் ஆதித்தியன், இந்திரன், இரணியகருப்பன் முதலியவர்களைப் பிரஹ்மமாக நிறுத்திக் கூறுதலால் இவர்களுள் ஒருவர் தேவதையாக, அவரே சத்தெனப்பட்டாரெனில் அன்று; உருத்திரரே சத்தாவர்.

𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌵𑍈 𑌰𑍁𑌦𑍍𑌰𑌸𑍍𑌸𑌨𑍍𑌮𑌹𑍋 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃।

புருஷராகிய உருத்திரர் சத்து, மகான், நமஸ்காரம் நமஸ்காரம் என்று மகோபநிஷதம் கண்டோக்தியாய்க் கூறுதலால்.

𑌯𑌤𑍍𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌽𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍𑌪𑌾𑌪𑍍𑌮𑌨
𑌔𑌷𑌤𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌃।

இவற்றுக்கெல்லாம் முன்னர் பாவம் அனைத்தையும் தகித்தமையால் புருஷர் எனப்படுவார். உருத்திரர் அனாதிமலமுத்தரானதினாலும் 𑌪𑍁𑌰𑌿𑌶𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂। சரீரத்தில்—தகரபுண்டரீகத்தில் தான் கிடைத்தலால் புருஷர் எனப்படுவார் எனக் கூறப்படுவர். அங்ஙனம் அவர் தகரபுண்டரீகத்துளராதல் அன்பர் உபாசனையின் நிமித்தம் என்ப.

இரணியகருப்பர் முதலில் இருந்தார் என்றவிடத்து, இரணியகருப்பர் தம்மையொழித்து ஒழிந்த பிரபஞ்சத்தைப்

படைப்பார் என்று கொண்டே அங்ஙனங் கூறப்பட்டார். இஃது இங்ஙனமாயின், ஸ்ரீநாராயணன் படைத்த நான்முகன் தனது இலாடத்தினின்று இந்திரனைத் தோற்றுவித்தார் என்று மகாபாரதத்திலும், வாசனேய சதபத பிராம்மணத்திலும் கூறப்படுதலால் இந்தச் சத்தாகிய உருத்திரர் இந்த லாடசங்காராகிய நீலலோகித உருத்திராவாரோ எனின், அன்று. இந்த நீலலோகித உருத்திரர் சிருஷ்டி சங்காரமாகிய நிவிர்த்திகலையின்பாலரான பிரம்மாவின் நெற்றியிற் றோன்றிய உருத்திராய், கிருஷ்ணார்ச்சுனர் கைலாசயாத்திரை சென்ற சமயத்து ஸ்ரீகண்டசிவனார் பாரிசத்து நின்றார் என்று மகாபாரதத்தில் உரைக்கப்பட்டாராக, மந்திராத்துவா, பதாத்வா, வர்ணாத்துவா, புவனாத்துவா, தத்துவாத்வா, கலாத்துவா என அறுவித அத்துவாக்களையும் கடந்து, பிருதிவி, தத்துவம் முதல் சிவதததுவாந்தம் வரையும் வியாபித்த சிவபிரானாருடைய அஷ்ட நாமங்களுக்குள்ளே படிக்கப்பட்டு, பிரமாவின் சிருட்டிசக்கரமாகிய நிவிர்த்திகலையினும் இதினின்றுயர்ந்த பிரதிஷ்டாகலையினும், இதினின்றுயர்ந்த வித்தியாகலையிலும், இதினின்றுயர்ந்த சாந்திகலையினும், இதினின்றுயர்ந்த சாந்தியதீத கலையினும் அடங்கிய காலாக்கினிபுவனமுதல் அனுசிருதைபுவனாந்தம் சங்கரிக்கும் மகாசங்கார மூர்த்தியார் இந்தக் கீழ்நிலைக்கண்ணராகிய நீலலோகித உருத்திராதல் ஓர் காலும் எய்தாது.

அஹமேக: ப்ரதமமாஸம்।

நான் ஒருவனே முதலிலிருந்தேன் என அதர்வசிகையிற் கண்ட உருத்திர வசனம் சாந்தோக்கியத்திற் சமன்வயமாதலினாலும் அந்த உருத்திரர் இந்தச் சத்தேயாவர்.

யதா தமஸ்தந்ந திவா ந ராத்ரி: ந ஸந்ந சாஸச்சிவ ஏவ கேவல:। ததக்ஷரம் தத்ஸவிதுர்வரேண்யம் ப்ரஜ்ஞா ச தஸ்மாத் ப்ரஸ்ருதா புராணீ।

எப்போதும் இருளாய்ப் பகலும் இரவும் இலவாய்ச் சத்தும் அசத்தும் இலவாய் இருந்ததோ அப்போது சிவன் மாத்திரமே இருந்தார். அந்தச் சிவன் அக்ஷரர்; சவிதாவினுடைய முக்கியப் பொருளாகிய அதினின்றும் பிரக்ஞை (பராசத்தி) உதித்தது எனச் சுவேதாச்சுவதரம் கூறுகின்றது. ஈண்டு மகாசங்கார காலத்தில் ஸ்தூல சூக்கும தேவர் மனிதர் முதலிய விஷய

வியவகாரம் யாவும் ஒழிந்து நின்றமையால் இருளாய் இருந்தது என்றும், சந்திரசூரியப் பிரகாசம் ஒழிந்துநின்றமையால் இராப்பகல் இலவாய் இருந்ததென்றும், நாமரூபங்களாகப் பகுக்கப்படும் ஸ்தூலரூபமொழிந்து சத்தாகிய பசுவும் அசத்தாகிய பாசமும் சூரூபசத்தாமாத்திரமிருந்தமையால் சத்தும் அசத்தும் இல்லையாய் இருந்ததென்றும், சர்வசாக்ஷியாய்த் தடைகடந்த பிரகாசத்தினராய்க் கேவலப்பொருளாய் நின்றமையின் சிவன் மாத்திரமே இருந்தார் என்றும் கூறப்பட்டது. ஆகலின், மகாசங்கார காலத்தில் நின்ற சிவனே சாந்தோக்கியத்தில் கூறப்பட்ட சத்தாம் என்க. ஈண்டுக் கூறப்பட்ட பிரக்ஞை சிவபெருமானினின்று வேறுறாத சத்தியின் மேற்று.

பிரமவாதிகள் ஒருங்கு குழுமி, எங்கிருந்து பிறந்தோம்; எவரால் சீவிக்கின்றோம்; எங்கே நிலையுறுகின்றோம்; எங்கே இலயமாகின்றோம்; எவரால் இன்பத்தினராவோம் எனச் சிருஷ்டி, திதி, சம்ஹார, திரோபவ, அநுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியத்திற்கும் காரணமாயிருக்கும் பிரமத்தைப் பிரபவித்பா தேவதையான பராசத்தி அம்பிகையினுடைய பிரசாதத்தினால் நிர்ணயஞ் செய்தல் வேண்டும் என்று துணிந்து தியானிக்குங்கால்,

தே த்யாநயோகாநுகதா அபஶ்யந் தேவாத்மஶக்திம்
ஸ்வகுணைர் நிகூடாம்।

அபகதபாப்மாதி சுவகுணங்களால் ஆவரிகப்பட்டு, மஹாதேவரினின்றும் பிரிவுறாத (அருட்) சத்தியைத் தியானயோகத்தினாற் கண்டார்கள் என்றும்,

பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே
ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச।

ஞானசக்தி, பலசக்தி, கிரியாசக்தியெனப் பலதிறப்படுவது அவரது இயற்கையாகிய பராசக்தி என்றும் சுவேதாச்சுவதரத்திற் கூறப்படலானும், பிரமத்திற்கு மாயாசக்தியாகாத அருட்பராசக்தி உளதாதல் அச் சுவேதாச்சுவதரத்தினாலும் அதன் உபப்பிருமணத்தினாலும் தெளிவாகிறது.

ஸகோ...ய ஈஶம் லோகாநீஶத ஈஶநீபி:।

இவ்வுலகமனைத்தையும் எவர் ஈசானிசத்திகளால் ஆளுகின்ருரோ அவர் ஏகராகிய உருத்திரர் என ஈசானி எனப்படும் பராசக்தி உருத்திரருக்குச் சத்தியாக்ச் சுவேதாச்சுவதரம் கூறுகின்றது.

ப்ரஹ்மணா விபஶ்சிதா। ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம।
ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் ந பிபேதி குதஶ்சந।

"சர்வஞ்ஞத்தையுடைய பிரமத்திஞேடு" எனவும், பிரமமானது சத்தியம், ஞானம், அனந்தம் எனவும், பிரமானந்தத்தை அறிந்தவன் யாண்டும் பயப்படுவானல்லன் எனவும், தைத்திரீய சுருதிகளும் பிரமத்திற்குப் பராசக்தியினின்று வேறுருத சர்வஞ்ஞத்தை ஆனந்தம் முதலிய குணங்கள் உளவாகக் கூறுகின்றன.

ஏஷ ஆத்மா அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யு
விஶோகோ விஜிகத்ஸோऽபிபாஸ: ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப:।

அந்த ஆக்மா அபகதபாப்மாதி குணங்களையுடையதாகச் சாந்தோக்கியத்திற் கூறப்படுகிறது. ஆகவே, சத்தின்பாற்பட்ட சிவனேனும் உருத்திரனேனும் பிரமனேனும் அருட்சத்திகளையும் சத்தியஞானனந்தாதிகுணங்களையும் உடையவராகப் பரசுருதிகளிற் கேட்கப்பட்ட சத்தானது, நிர்விசேஷப் பொருளாகக் காணப்படுகின்றதே எனின் அன்று.

ஶக்திஶ்சிவஶ்ச ஸச்சப்தஸ்ய ப்ரக்ருதிப்ரத்யயோதிதௌ।

சத்சப்தத்தின் பிரகிருதிப் பிரத்தியங்கள் சிவமும் சத்தியுமாம் என்று அபிப்பிராயம் கூறுதலால் சத்தானது அருட்பராசத்தி விசிஷ்டசிவமென்பது பொருள். இந்தச் சக்தியை அநிர்வசீய மாயாசக்தி எனப் பொருள்கொண்டால் என்னவெனில், அந்தச் சத்து உருத்திரர், ஆன்மா, பிரமன், சிவன் என்பவரில் எவருக்குச் சுருதிவாக்கியங்களுக்குச் சமன்வயம் வலுவாக இருக்கிறதோ, அவருக்கே; மற்றவருக்குப் பொருந்தாது. நிற்க,

நிர்க்குணம் பிரஹ்மம் என இந்தப் பரசுருதிகளில் இன்றே எனில், இல்லை. அங்ஙனமாயின், சுவேதாச்சுவதரத்தில் பிரமம் நிர்க்குணம் எனக் கூறப்பட்டமைக்குச் சமாதா

ணம் என்னவெனில், நிர்க்குணம் என்று கூறிய அச் சுவேதாச் சுவதரமே பிரமத்திற்கு அபின்னமாகப் பராசத்தியைக் கூறியிருக்கிறது.

ஜ்ஞ: ஸர்வவித்ய: ப்ரதானக்ஷேத்ரஜ்ஞபதிர் குணேஶ:।

இவர் சர்வக்ஞர் - குணி என்றும், பிரதானத்திற்கும் க்ஷேத்ரக்ஞனுக்கும் (பசுவுக்கும்) பதியாயினர் குணங்களையுடைய ஈசர் என்று பிரமத்தைக் கூறுதலால் பிரமம் குணியாம். பிராகிருத சாத்விக இராசத தாமத குணங்களின்மையால் சுவேதாச்சுவதரத்தில் நிர்க்குணம் என்றும், பாசகலைகள் அற்று இருப்பதால் நிஷ்கனம் என்றும், பசுபாசங்களுக்குரிய தொழில் யாதும் இன்மையால் நிஷ்கிரியம் என்றும் கூறப்பட்டதாக உணரவேண்டும்.

அங்ஙனமாயின், பிரஹதாரண்யத்தில் அக்ஷரப்ருஹ்மம் ஸ்தூலமன்று அணுவன்று குறியதன்று நெடியதன்று எனக் கூறுப்பட்டதால் அந்தப் பிரமம் நிர்க்குணப்பிரமமே எனில், அதே உபநிடதத்தில் 'அந்த பிரஹ்மத்தின் ஆஞ்ஞையினால் சூரிய சந்திரர் பூமி ஆகாயம் நிமிஷம் முகூர்த்தம் இராப்பகல் பருவதங்கள் நதிகள் தாங்கப்படுகின்றன எனக் கூறப்படுதலால் அந்த அக்ஷரப்ரஹ்மம் சகுணப்பிரமமேயன்றி நிர்க்குணப்பிரமமன்று.

ஆதலால், அக்ஷரப்பிரஹ்ம சிவனர் சேதனசேதனப் பிரபஞ்சத்தை வியாபித்தாரேனும் அவர் அப்பொருள்களில் ஸ்தூலத்துவம் அணுத்துவம் குருத்துவம் நீட்டம் முதலாய குணங்களை அடையாராய், சடப்பொருள்களால் தொடக்குண்ணுத சமஸ்தகல்யாணகுணங்களுக்கும் ஆஸ்பதமாயினர் என உணர்த்தற்கே ஸ்தூலமன்று அணுவன்று எனக் கூறப்பட்டார். ஆதலால் பரசுருதி உபநிஷதங்களில் சகுணப்பிரமம் ஒன்றே புகழப்பட்டதன்றி நிர்க்குணப்பிரமமென மற்றொன்று கோடற்குச் சிறிதும் இடனின்றும். அதுகொண்டு சத்தெனினும், ஆன்மா எனினும், பிரமம் எனினும், சிவன் எனினும், உருத்திரர் எனினும் அவரெல்லாம் ஒரேசகுணப்பிரமம் என்பது தெள்ளிது. அந்தச் சத்தாகிய சவிசேஷப் பிரமமே சிருஷ்டிக்குக் காரணம்.

ஸந்மூலா: ஸோம்யேமா: ஸர்வா: ப்ரஜா:।

என்று சாந்தோக்கியம் கூறிற்று.

ஸஏஷ்யோ ஸ்வர்: ப்ரஜாஸ்ஸதி ஸம்பத்யநவிதுஸ்ஸதி ஸம்பத்யாமஹே।

சௌம்ய! இந்தப் பிரசைகள் எல்லாம் சத்தில் அமிழ்ந்தியும், அதில் அமிழ்ந்துகின்றும் என அறிகின்றிலர் என்று சாந்தோக்கியம் கூறினமைக்கு அனுசரித்து, அச் சாந்தோக்கியம் "க்ஷேத்திரத்தை அறியாத ஜனங்கள் பூமிக்குள் மறைப் புண்டு கிடக்கின்ற பொற்பாத்திரத்தின் மேலே தினந்தோறுஞ் சஞ்சரித்தும் அதைக் கண்டிராமைபோல, பிரஜைகளெல்லாம் தினந்தோறும் இந்தப் பிரமலோகத்தை அடைந்தும் அஞ்ஞானத்தினுல் மேற்கொள்ளப்பட்டவராகி, அதனை அறிந்திலர்" என்று கூறுதலால், மேலே உரைத்த சத்து அபகதபாப்மாதி குணங்களினின்று வேறுருத தகராகாசத்தின் மேற்றும் என்க.

தஸ்ய தாவதேவ சிரம் யாவந்நவிமோக்ஷ்ய

எதுகாறும் வீடுறவில்லையோ அதுகாறும் முத்தியடையக் காலம் நீடிக்கும் எனச் சாந்தோக்கிய சுருதி எதிர்மறைமுகத்தான் சத்தே முத்தியடைதற்குக் காரணம் என வலியுறுத்திற்று.

இங்கே உரைத்தவாற்ருல் சத்தே உலக சிருட்டிக்குக் காரணம் என்றும், இதனையே நித்திராகாலங்களில் பிரசைகள் அடைந்து சுகித்து மீள்கிருர்கள் என்றும் சத்தே முத்திக்குக் காரணம் என்றும் உணரற்பாற்று. சத்தே சத்தியம் என்றது.

சநாதிர்மஸம்ஸ்ரேஷ ஸா மஹாவாக்யவிசேஷதஃ।
சத்யஞ்சவரிஸ்யாத்தா ஸிவஉதத்யச்யதேவிஹ:।

என்று வியாசர் உபபிரம்மணம் கூறுதலாலும் உணர்க.

தத்துவமஸி என்பதில் தத்பதப்பொருளாகிய பரமான்ம சிவபிரானுடைய அபகதபாப்மாதி குணங்களைத் துவம் பதத்தினுல் சம்பிரதானன் எனக் குறிக்கப்படும் சீவன் அடைதலாகிய பரமசாம்யமுறுகின்ருன் என்பதுணர்த்த முண்டகோபநிடதம்.

நிரஞ்ஜநஃ பரமம் ஸாம்ய முபைதி

நித்திய சம்சாரத்தினின்று முக்தனுய் பரமசாம்யத்தை அடைகிருன் என்று கூறுதலால் பரப்பிரமமான சிவனுடைய சமானகுண கைவல்லிய லக்ஷ்மியே ஆன்மாவுக்கு எய்திய பரம பிரயோசனம் என்பது கருத்து.

ப்ரஹ்மைவ ஸந் ப்ரஹ்மாப்யேதி

என்னும் பிருகதாரண்ணிய மந்திரம் ஜீவான்மா பிரமபாவனை யாகி பிரமலோகத்துக்குப்போய் அடைகிருன் எனப் பொருள் படும்.

யோ ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி ।

என்னும் முண்டக சுருதியும் பிரமத்தை அறிபவன் சாமியமுறு கிருன் என்றது.

யதா சர்மவதாகாசம் வேஷ்டயிஷ்யந்தி மாநவா: ।

ததா சிவமவிஜ்ஞாய து:கஸ்யாந்தோ பவிஷ்யதி ।

என்ற சுவேதாசுவதரமந்திரமும் பிரமத்தைத் தெரிந்துகொள் ளாமல் முத்தியை அடைய முடியாது என்றது.

முக்த: ஶிவஸமோ பவேத் ।

முக்தன் சிவனுக்குச் சமமாக ஆகிருன் என்று கூறிற்று. சிவ சிவகுணசாம்யம் சிவாகமங்களில் மிகப் பிரசித்தம்.

ஶிவோஹமஸ்மி ஸித்தாந்தம் வேதாந்தம் ஸோஹமஸ்மி தத: ।
ஸர்வாஶய விநிர்முக்தோ கருடத்யாநே விஷக்ஷயம் ।
ஶிவாநந்த த்யாநே ப்ராப்தி பரமாம் கதிம் ।

சிவோகம் சோகம் என்ற வாக்கியங்கள் முறையே சித்தாந்த வேதாந்த வாக்கியங்கள். கருடத்தியானத்தினுல் எப்படி விஷம் நாசத்தை அடைகிறதோ அப்படி ஆத்மா சிவத்தியானத்தினுல் சர்வபாபத்தினின்றும் நீங்கி மேலாகிய கதியை அடைகிருன் என்றது

ஶிவ ஏகோ த்யேய: ஶிவங்கர: ஸர்வமந்யத் பரித்யஜ்ய ।

மற்றெல்லாம் விடுத்து சிவன் ஒருவரே தியானிக்கத்தகுந்தவர் என கண்டோக்தியாய் வேதாந்தசிகையில் கூறப்பபட்ட மெய்ப் பொருளை ஆன்மாக்கள் யாவரும் தமேகத்தியானமாய்ப் பாவனை செய்தால்,

யதாநேகநதீதோயம் ப்ராப்ய வேகா ஸமுத்ரகம் ।

வந்திநோ நாரீ ஶிவபூஜாவிதே: ஸமம் ॥

என்றபடி புத்தியையும் முத்தியையும் அடைகிருர்கள்.

# தமிழ்மறையும் ஆசீர்வாதமும்

[விருத்தாசலம்: சிவஸ்ரீ K. விருந்தகிரீக்குருக்கள் எழுதியது.]

உலகத்திலே சர்வேசுரனாகிய பரமேசுரனை மனிதர்களாகிய நாம் பூஜித்து மோக்ஷசாதனங்களை அடைகின்றோம். நாம் அப்படி அருச்சித்தற்குச் சில சாஸ்திரங்களைக் கையாள வேண்டியிருக்கிறது. அவை வடமொழிக்கணுள்ள வேதாகமங்களும், தென்மொழிக்கணுள்ள தேவார திருவாசகங்களுமாம். வேதாகமங்கள் ஈசுரனுடைய திருவாக்குகள். தேவாரதிருவாசகங்கள் அவனடியடைந்த அன்பரருள்வாக்குகள். தற்காலத்தில் பிராமணர்—பிராமணரல்லாதார் விரோதங்களும், வடமொழி-தென்மொழி பேதங்களும் நிகழ்கின்றன. அந்த நாளில் மொழி பேதம் இல்லை. நமது முன்னோர் வேதாகமங்களிலும், தேவாராதிகளிலும் வல்லவர்களாய், இருமொழிகளையும் போற்றி வளர்த்துவந்தார்கள்.

ஆதிசைவகுலத்துதித்து சாக்ஷாத் ஈசனின் திருஉரு எனக் கொண்டாடப்படும் ஸ்ரீசுந்தரர் ஆரியமொழி பயின்றும் ஈசனைத் தென்மொழியாலேயே பாடியிருக்கின்றார். ஸ்ரீ கச்சியப்பசிவாசாரியரும், திருத்துறையூரில் அவதரித்த சிவநெறிச்செல்வராகிய சகலாகமபண்டிதர் எனப்படும் அருணந்திசிவாசாரியரும், சிதம்பரத்துக்கடுத்த கொற்றவன்குடியில் வசித்த உமாபதிசிவாசாரியரும் இருமறையும் போற்றிவந்திருக்கிறார்கள்.

மேலும், தேவாரதிருவாசகம் பாடியவர்களுள் மாணிக்கவாசகப் பெருமானும், ஸ்ரீசுந்தரரும் ஆதிசைவ மரபினர்கள். இன்னும் தென்னிந்தியாவில் அநேக சிவாலயங்கள் இருக்கின்றன. அப்படியிருந்தும், நால்வரால் பாடப்பட்ட தலங்களே கொண்டாடப்படுகின்றன. அங்ஙனமாக,

தற்காலம் தென் இந்தியாவில் அநேக ஆலயங்களில் கும்பாபிஷேக மஹோற்சவ காலங்களில் ஆசீர்வாதம் சொல்லித்தான் தேவாரம் சொல்லவேண்டுமென்றும், தேவாரம் சொல்லித்தான் ஆசீர்வாதம் சொல்லவேண்டுமென்றும் சிறு சச்சரவுகள் உண்டாகின்றன. ஆனால், அவை விஷ்ணு ஆலயத்தில் தீர்த்தச்சண்டைகளும் தீவட்டிச்சண்டைகளும் போலில்லாது இருப்பது நமது புண்ணியந்தான். இவ்வாதத்திற்குச் சமாதானம் என்னவெனில், கீழ்க்காணும் காரணாகம வாக்கியப்படி தேவாரத்தை

யும், பின் ஆசிர்வாதத்வையும் சொல்லி நடத்துவது பொருத்த மாயிருக்கும் என்பது எனது கருத்து.

மண்டபார்ச்சனவிதிப் படலம்:

யஜுர்வேதம் பூர்வதோ ப்ரோக்தம் ருக்வேதஞ்ச ததஃபரம் |
ஸாமவேதம் ததஃப்ரோக்தம் அதர்வணம் அதஃபரம் |
ததா வாஸ்த்வயநம் கார்யம் சைவசைவ ப்ராகாரதஃ |
ஸுமுஹூர்த்தேக்ருதேசைவ மண்டபேசைவ விசேஷதஃ |
ப்ராவிசாஸ்த்ரயநம் பஸ்சாத் சாந்த்யநுஷ்டம் ததஃபரம் |
நீராஜநம் ததஃக்ருத்வா குஸீவர்ணாதிகம் ஸமாசரேத் |
ஹஸ்தாநாம் ஹஸ்ததேயம் ஸ்யாத் ஸதா ஸம்ஹாரகம் பவேத் ||

---

## நவராத்திரி விஷயமான கேள்விக்குப் பதில்

சைவசாஸ்திரபரிபாலனம் தொகுதி 2, 3, கார்த்திகைமீ வெளியீட்டில் நவராத்திரி விஷயமான கேள்விக்குப் பதில் வருமாறு:—

நவராத்திரி ஆரம்பம் அமாசம்பந்தமான பிரதமையிற் செய்யக் கூடாதென்பதற்குப் பிரமாணம்:

யாமளதந்த்ரே

ததா கந்யாராசிஸ்தே பர்வபர்வணி விசேஷதஃ |
ப்ரதமாயாம் ஸமாரப்ய நவம்யந்தே ப்ரபூஜயேத் |
கர்மாரம்பாத் ஸதா த்யாஜ்யா நாசயேத்து குலம் யதஃ ||

என்னும் வாக்கியத்தால் புரட்டாதிமீ பூருவபக்ஷ பிரதமை முதல் நவமி வரை நவராத்திரிபூஜை புரிதல்வேண்டுமெனவும், அமாசம்பந்தமான பிரதமையிற் செய்தல் கூடாதெனவும், செய்தால் குலநாசமுண்டாகு மெனவும் யாமளதந்திரம் கூறுகின்றது.

இங்ஙனம்
ரா. தே. வாமதேவ சிவாசார்யர்,
கோபிசெட்டிபாளையம்.

குறிப்பு:—உற்சவத்துக்குத் தீர்த்ததினத்தைப் பிரதானமாகக் கூறியதுபோலன்றிப் பிரதமையை ஆரம்பத்துக்கும், நவமியை அந்தத்திற்கும் பிரதானமாகக் கொண்டு ஆகமங்களிலும், சோதிடநூல்களிலும் கூறியிருப்பதால் அமாவாசையில் ஆரம்பிப்பது குற்றமாகும். ப-ர்.

---

# மதிப்புரை

## கோவைத் தமிழ்ச்சங்க வெளியீடுகள்

### மருதமலை மான்மியம்

மருதமலை என்பது குன்றுதோறாடல் புரியும் குமரவேள் குழந்தைக்கோலத்தோடு எழுந்தருளியிருக்குமோர் திவ்யகிரி. அக்கிரியின் மகிமையைக் கூறுவது இந்நூல். மருதமலையைப்பற்றி அறியவேண்டியவை அனைத்தும் சுருக்கமும் விளக்கமுமாக இதிற் கூறப்பட்டுள்ளன. இந்நூல் மூன்று பகுதிகளாக எழுதப்பட்டிருக்கிறது. முதற்பகுதியில் மூர்த்தி தீர்த்தம் முதலிய விபரங்களும், இரண்டாம் பகுதியில் ஸ்ரீகச்சியப்பமுனிவர் தமது பேரூர்ப் புராணத்தில் இரு படலங்களிற் கூறிய இத்தல மஹாத்மியமும், மூன்றாவது பகுதியில் இத்தலப் பிரபந்தத் திரட்டும் அடங்கியுள்ளன. இம்மான்மியத்தை எழுதியுதவிய ஸ்ரீமத் ராவ்சாஹேப் இராமச்சந்திரம் செட்டியார் அவர்களுக்குச் சைவஉலகம் என்றும் கடமைப்பட்டுள்ளது.

### கொங்குநாட்டுப் பாடல்பெற்ற தலங்கள்

நமது ஆசாரியமூர்த்திகளான ஸ்ரீ ஞானசம்பந்தாதி அருளாளர்களாற் பாடல்பெற்ற தலங்கள் மிகவிசேஷித்தன. அங்ஙனம் பாடல் பெற்ற கொங்குநாட்டுத் தலங்கள் ஏழு. அவை அவிநாசி, திருமுருகன் பூண்டி, பவானி, திருச்செங்கோடு, வெஞ்சமாக்கூடல், பாண்டிக் கொடுமுடி, திருக்கருவூரானிலை என்பன. இச் சிறிய நூலின்கண் இத்திருத்தலங்களின் பெயர்க்காரணமும், மூர்த்தியின் சிறப்பும், தீர்த்த வரலாறும், அருச்சித்துப் பேறடைந்தோர் பெயரும், இன்னபிறவும், தேவாரம், திருவாசகம், புராணம் முதலிய பல நூலாதாரங்கொண்டு திட்பமும் நுட்பமும் அமைய எழுதப்பட்டுள்ளன. பல நூல்களைப் பன்னாட் பயின்றும் அறிதற்கரிய நுண்ணிய விஷயங்களையெல்லாம் இவ்வொரு நூலால் அறிந்துகொள்ளும்படி சைவ மெய்யன்பர்கட்கு எழுதியுபகரித்த திருவாளர் யாவரெனில் பெரியபுராண உரையாசிரியர் C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்களேயாவர்.

### கொங்குநாட்டுச் சிவஸ்தலங்கள்

சிவஸ்தலங்களைப் பாடல்பெற்ற தலங்கள் எனவும், வைப்புத்தலங்கள் எனவும், ஏனைய தலங்கள் எனவும் மூன்றாக வகுத்துள்ளார்கள் அறிஞர்கள். கொங்குநாட்டிற் பாடல்பெற்றவை அவிநாசி ஆதி ஏழு. சமயகுரவர் யாதாயினுமோரிடத்தில் ஓர் தலத்தின் பெயரை மாத்திரம் குறித்திருந்தால் அதனை வைப்புத்தலம் என்ப. அஃதாவது பதிகத்தில் வைக்கப்பட்டதென்பதாம். பேரூர், குரக்குத்தளி என்ற பெரிய பாளையம் ஆதியன கொங்குமண்டல தேவார வைப்புத்தலங்கள். முக்கணீசுரம் திருவாசக வைப்புத்தலம். சளந்தை, ஆதித்தேசுரம் திருவிசைப்பாத்தலம். நடுவாச்சேரி முதலியன ஏனைய தலங்கள். இந்த அரிய நூலில் வைப்புத்தலங்கள் ஏனைய தலங்களைப்பற்றிய அவசியமான குறிப்புக்கள் காட்டப்பட்டுள்ளன. எழுதியவர் "கோவைகிழார்."

### கொங்குநாட்டுக் குன்றுதோறாடல்கள்

இது மருதமலைமுதல் சொண்டறங்கிமலை ஈறாய பல குன்றுதோறாடல்களின் குறிப்புகளைக் கொண்டது.

## கொங்குநாட்டு எல்லைகள், அரச பாரம்பரியங்கள் முதலிய விபரங்கள்

இது கொங்குநாட்டின் எல்லை, கி. மு. முதல்நூற்றாண்டுகட்கு முன் கொங்குநாட்டின் சரித்திரம் கொங்கு அரசர்கள், சமயாசாரியர் கள், சிற்பக்கலை வள்ளல்கள் முதலிய எட்டுப்பிரிவுகளைக் கொண்டு மிளிர்வது. எழுதியவர் குடிசைக்கிழார் திரு. அ. சிதம்பரனார் அவர்கள்.

## கொங்குநாட்டுச் சரித்திரச்சுருக்கம்

இது சங்ககாலம் முதல் ஆங்கிலர் ஆட்சிவரை இந்நாட்டுச் சரித் திரச்சுருக்கமாகக் காட்டுவது. எழுதியவர் கோவைகிழார்.

## கொங்குநாடும் ஏனைய தமிழ்நூல்களும்

இதில் தேவாரம், திருவாசகம், திருப்புகழ் இவற்றைத் தவிர ஏனைய நூல்களில் கொங்குநாட்டைக் குறித்துப் பேசும் செய்யுட்கள் தொகுக்கப்பட்டிருக்கின்றன. இதிற் றொகுக்கப்பட்ட நூல்கள் புற நானூறு, கருவூர்ப்புராணம் முதலிய தல புராணங்கள், சமணசரித்திரம், பெரியபுராணம் முதலியவை. தொகுத்தவர்கள் கோவைகிழாரும், வேங்கடகிருஷ்ண முதலியாரும்.

## கொங்குநாட்டில் உள்ள தேவாரம் பாடப்பட்ட தளிகளும், திருப்புகழ் பாடப்பட்ட தளிகளும், அப்பதிகங்களின் திரட்டும்

இதில் நம் சமயாசாரிய மூர்த்திகள் பாடிய தேவாரங்களின் திரட் டும், பேரூர் முதலிய வைப்புத்தலங்களைக் குறிக்கும் தேவாரம் முதலிய பாடல்களும் காணப்படுகின்றன. இது சைவர் ஒவ்வொருவரிடத்தும் காபூஷணமாய் விளங்கத்தக்க பெருமையுடையது. தொகுத்துதவியவர் குடிசைக்கிழார் அ. சிதம்பரனார் அவர்கள்.

## கருவூர்த்தேவர்

இது சரிதவரலாறு, திருவிசைப்பா ஆராய்ச்சி, திருவிசைப்பாத் தலக்குறிப்பு முதலியன அடங்கியுள்ள ஆராய்ச்சிநூல். கோவை சைவத்திருவாளர் C. K. சுப்பிரமணியமுதலியார் B. A., T. M. U. அவர்கள் இயற்றியது.

## ஸ்ரீ சுந்தரமூர்த்திகளும், கொங்குநாடும்

இது சுந்தரமூர்த்திநாயனர் கொங்குநாட்டுக்கு எழுந்தருளிய காலத் தில் இந்நாடு இருந்த நிலையையும் பிறவற்றையும் ஆராய்ச்சி செய்வது. திரு. C. M. இராமச்சந்திரசெட்டியார் B. A., B. L. அவர்கள் இயற்றியது.

## கொங்குநாட்டுத் திருப்புகழ்

இதில் பழநி என்னும் படைவீட்டுத்தலமீதும், மருதமலை முதல் திருச்செங்கோடு ஈறாய 10 குன்றுதோறாடற்றலங்கள் மேலும் கருவூர் முதல் கோவை ஈறாகிய 19 தலங்கள்மீதும் ஸ்ரீமத் அருணகிரிநாத ஸ்வாமிகள் பாடியருளிய திருப்புகழ்கள் தொகுக்கப்பட்டுள்ளன. இதனைத் தொகுத்து உதவியமை போற்றத்தகுந்தது. தொகுத்தவர் ஸ்ரீ குடிசைக்கிழார் அ. சிதம்பரனார் அவர்கள். இந்த நூற்றிரு பதிகங்களையும் இவைபோன்ற வேறு பல நூல்களையும் பெரியபுராணத்துக்கு, சைவ சித்தாந்தப் பேரறிஞர் ஸ்ரீமத் C. K. சுப்பிரமணியமுதலியார் எழுதிய உரையையும் பிரசுரஞ்செய்துவருபவர்கள் கோவைத் தமிழ்ச்சங்கத்தினர். இவர்கள் இப் பிரசுரங்களால் கோவை நகருக்கு மாத்திரமன்று, சைவ உலகம் முழுவதுக்குமே அரிய பெரிய நன்மையைச் செய்துவருகிறார்கள். நம் நாட்டுக்கு விஜயம் செய்து கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழியும் வாக்குநலத்தினாலே உறுதி பயக்கும் உண்மைப் பொருள்களைப் பிரசாரணஞ் செய்து சென்ற முதலியார், செட்டியார் என்னும் இரு பெரியார்களும் இச் சங்கத்தினரே. இச் சங்கம் என்றும் நிலைத்து நின்று உபகாரம் செய்யுமாறு சிவபெருமான் திருவருள் புரிக. இப் பதிகங்களை, திரு. S. நமசிவாயன், கோவைத் தமிழ்ச்சங்கம், வைசியாள்வீதி, கோயமுத்தூர் என்ற விலாசத்துக்கெழுதி விலைக்குப் பெற்றுக்கொள்க.

---

## யாழ்ப்பாணம்—வண்ணை வைத்தீசுரர் தோத்திரங்களும், விஷ்ணுதோத்திரங்களும்

வைத்தீசுரர் தோத்திரத்தில் வைத்தியநாதாஷ்டகம், பஞ்சாக்ஷரக்ஷாதிர வைத்தியேசராவலம்பஸ்துதி, நடராஜ புஜங்கஸ்தோத்திரம் என்பவை அடங்கியுள்ளன. இவற்றை இயற்றியவர் பிரமஸ்ரீ பகவதீஸ்வர சாஸ்திரிகள் அவர்கள். வடமொழியைப் பயிலும் இளைஞர்க்கு உபயோகமாமாறு அச்சிட்டு வெளிப்படுத்தியவர் கொக்குவில் சோதிடபரிபாலனமடம் பிரஹ்மஸ்ரீ இ. சி. இரகுநாதையர் அவர்கள் ஆவர். வடமொழிபயிலும் பிராமணச் சிறுவர்கட்கு இப் புத்தகம் விலையின்றிக் கொடுக்கப்படுமெனப் பதிப்பாசிரியர் வெளியிட்டுள்ளார். ஸ்தோத்திரங்கள் மிக இனிமை வாய்ந்தன. கிடைக்குமிடம்: சோதிடவிலாசபுத்தகசாலை, கொக்குவில், (சிலோன்) என்ற விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக்கொள்க. இங்கே அனேக நல்ல தமிழ் சம்ஸ்கிருதப் புத்தகங்கள் விற்பனைக்கிருக்கின்றன.

## தில்லைத் திருவாசகப் பதிகங்கள்

இது தில்லையில் மாணிக்கவாசகசுவாமிகள் அருளிய பதிகங்களை ஒருங்கு திரட்டித் தமது அத்தையாரின் ஞாபகார்த்தமாகச் சரவணையூர் குமரகோட்டம் திரு. வ. சோமசுந்தரம் அவர்களாற் பதிப்பிக்கப்பட்டது. ஞாபகார்த்தப் பிரசுரங்களை வெளியிடுவது அனைவராலும் பின்பற்றத்தக்கது.

## யசுர்வேதம்

இது, கிருஷ்ண சுக்கில மந்திரங்களின் பரிபூரணத் தமிழ்மொழி பெயர்ப்பு. இதனை எழுதியவர் வேதசந்திரிகை யசுர்வேதக்கதைகள் முதலியவற்றின் ஆசிரியரான எம். ஆர். ஜம்புநாதன் அவர்கள் ஆவர். இது மேஷ ஆசிரியரால் எழுதப்பட்ட விரிந்த முகவுரையோடும், அனுபந்தத்தோடும் கூடியது. இப்புத்தகம், வடமொழி தென்மொழிகளில் உள்ள பல நூல்களை அச்சிட்டு இலவசமாகக் கொடுத்துவருபவர்களும், தருமபுர ஆதீனத்துத் திவ்ய தலைவருமான ஸ்ரீலஸ்ரீ ஷண்முக தேசிக ஞானசம்பந்த மஹாசந்நிதானம் அவர்கள் உதவிய பொருளுதவி கொண்டு பிரசுரிக்கப்பட்டுள்ளது. இப்புத்தகத்தை அன்போடு உதவிய ஸ்ரீலஸ்ரீ மஹாசந்நிதானத்துக்கு என்றும் நன்றி பாராட்டும் கடமையுடையேன். ப—ர்.

## அதர்வவேதம்

இது அதர்வவேத சம்ஹிதையின் பரிபூரணத் தமிழ்மொழிபெயர்ப்பு. இது திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவர்களான ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாதசுவாமிகள் அவர்கள் பொருளுதவியைக்கொண்டு, வேதோபநிஷத் ஆசிரியர் எம். ஆர். ஜம்புநாதன் அவர்களால் எழுதப்பட்டது. தமிழில் இயற்சொற்கள் அமைந்த இனிய நடையில் மொழிபெயர்த்த ஆசிரியரது பெருந்தகைமை பாராட்டத்தக்கது.

இப்புத்தகத்தின் முகப்பில் ஐந்தாம் ஜோர்ஜ் மன்னர் உருவப் படமும், மேஷ மன்னர் ஞாபகார்த்தமாக ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளால் ஏற்படுத்தப்பட்ட ரூபா 1000 தமிழ்ப்பரிசு விபரமும், தேவாரத்திருமுறைப் பரிசு விபரமும் காணப்படுகின்றன. விரிந்த முகவுரையோடு கூடியது. தமிழ்மொழி வளர்ச்சியின்பொருட்டு, உழைத்துவரும் ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் கடமைப்பட்டுள்ளது. இப்புத்தகத்தை உபகரித்த சுவாமிகளுக்கு நன்றி செலுத்துகின்றேன்.

## ஸ்ரீ அர்த்தநாரீஸ்வர ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரமும், அஷ்டோத்தரசத நாமாவளியும்

இதனை லோகோபகாரமாகப் பதிப்பித்துதவியவர்கள் ஆதிசைவ மகாசபை அத்தியக்ஷர்கள். சிவஸ்ரீ சதாசிவபண்டிதசிவாசாரியர் திருச்செங்கோடு என்ற விலாசத்துக்கு எழுதிப் பெறலாகும்.

## லலிதாஷ்டோத்தர சதநாமஸ்தோத்திரமும், நாமாவளியும்

பருத்தியூர் சிவஸ்ரீ சுப்பிரமணிய சிவாசாரியரவர்களாற் பதிப்பித்து, சைவமக்களுக்கு உபயோகமாகும்படி வெளியிடப்பட்டது. விலை அணா 1.

———